REGD. No. TN MS (C) 244 ANNA (Tamil Daily) MADRAS Phone 12818 4 பக்கம் விலை 30 காசு

**மனம்**

செயலில் கெட்ட வனை விட மனதில் கெட்டவன மிகவும் கெட்டவன்.

— அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**அமைதி**

அமைதியிலே இரண்டுவகை உண்டு. ஒன்று விவரம் தெரியாமலிருக்கிற அமைதி. இன்னொன்று எல்லா விவரங்களையும் தெரிந்திருக்கும அமைதி;

— பேரறிஞர் அண்ணா

மலர்: 1 சென்னை 13—8—1977 சனி வெளியூர் 14—8—1977 ஞாயிறு இதழ்: 299

### மருத்துவக் கல்லூரி தேர்வு:

## காங்கிரஸ் தலைவர் ஏ. ஆர். மாரிமுத்து பாராட்டு

சென்னை, ஆக. 13— இந்த ஆண்டு மருத்துவக் கல்லூரி மாணவர் தேர்வு புகார் ஏதும் இல்லாமல் — தலையீடு இல்லாமல் நடந்தது என்று காங்கிரஸ் தலைவர் ஏ. ஆர். மாரிமுத்து பாராட்டு தெரிவித்தார்.

மருத்துவம், பொது சுகாதார மானியகோரிக்கையின் மீது காங்கிரஸ் தலைவர் ஏ. ஆர். மாரிமுத்து பேசியதாவது:—

மருத்துவக் கல்லூரியில் மாணவர்கள் தேர்வு புகார் இல்லாத அளவில் அதில் தலையீடு இல்லாமல் நடைபெற்றிருக்கிறது என்பது என்னுடைய முழுமையான அபிப்பிராயம்.

### கிராமப்புற மாணவருக்கு

இந்த ஆண்டு நடந்த தேர்வு முறை தலையீடு இல்லாமல்— நடந்த முறை நீடித்து நடக்கவேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

கிராமப்புறத்து மாணவர்கள் 40 சதவிகித இடத்தைத்தான் பெற்றிருக்கிறார்கள். 60 சதவிகித இடங்களை அவர்கள் பெற விதி முறைகளை மாற்ற வேண்டும்.

இவ்வாறு ஏ. ஆர். மாரிமுத்து கூறினார்.

### பொன்னுசாமி

கழக உறுப்பினர் பொன்னுச்சாமி பேசும் போது குறிப்பிட்டதாவது:

விளையும் பயிர் முளையிலே தெரியும் என்று சொல்வார்கள். அதுபோல நமது தமிழ் நாடு நாளை பூத்துக் குலுங்கும் பூஞ்சோலையாக பார்த்து பரவசமடையும் பசுஞ் சோலையாக ஆகப்போகின்றது என்பதற்கு எடுத்துக் காட்டுத்தான் இந்த அறிக்கை.

ஆடிப்பட்டம்தேடிவிதை என்போர் ஆன்றோர். இது ஆடிப்பட்டம்தான். நல்லதோர் விதைதனை விதைத்து விட்டார் நமது முதல்வர்.

இன்று இரு இலைகளாக துளிர் விட்டிருக்கிறது. இதைக் கருக்கிவிடலாம் என்று கருதிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஒன்று கூறிக்கொள்வேன். பிஞ்சு நெஞ்சில் நஞ்சை வளர்க்கும் நயவஞ்சகர்கள் அல்ல. அஞ்சா நெஞ்சார்கள். நல்லவர்கள் நலம் நாடுபவர்கள் என மழைக் கொட்டத்தான் போகிறது.

### நாடு காணாத நல்லகாலம்

நாடு இதுவரை கண்டிராத நல்லகாலம்—பொற்காலம் என்றுதான் சரித்திரச்சான்றோர் இக்கணம முதல்தமிழகமுதல்வரைக் கூறுவர் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

மக்களுக்கு நாம் பொன்னைத் தரவேண்டாம். பொருளைத்தரவேண்டாம் நோயற்ற வாழ்வைத் தந்தாலே போதும். அவர்கள் செல்வர்களாக ஆகிவிடுவார்கள். தற்காக நமது அரசு ஏறத்தாழ 71கோடி ரூபாயை ஒதுக்கியிருப்பது பாராட்டுக் குரியதாகும்.

இவ்வாறு பொன்னுசாமி பேசினார்.

பாபநாசம் தண்ணீர்

### சட்ட சபையில் கவன ஈர்ப்பு

சென்னை ஆக. 13— அம்பாசமுத்திரம் குகியிலுள்ள பாபநாசம் அணைக்கட்டிலிருந்து தண்ணீர் விடாததால் 20 ஆயிரம் ஏக்கர்திலப் பயிர்கள் வாடிக் கொண்டிருப்பதாக பி. சொர்ணம் ஆர். கிருஷ்ணன் ஆகியோர் ஒரு கவன ஈர்ப்புத் தீர்மானத்தைக் கொண்டு வந்தனர்:

இதற்குப் பதிலளித்த

(2-ம் பக்கம் பார்க்க)

### ★ சென்னை நகரில் மேலும் 5 மருத்துவமனைகள்

### ★ குடிசைவாசிகளுக்கு வாசலிலேயே வைத்திய வசதி

### ★ ஊராட்சி ஒன்றிய மருந்தகங்களை அரசு ஏற்கிறது

# புரட்சித்தலைவர் அறிவிப்பு

**சென்னை, ஆக. 13— மருத்துவத்துறை மானியக் கோரிக்கையில் முதல்வர் புரட்சித்தலைவர் மக்களுக்குத் தேவையான ஏராளமான நல்வாழ்வுத் திட்டங்களை அறிவித்தருககிறார்.**

சட்டமன்றத்தில் இன்று காலை மருத்துவத்துறை மானியக் கோரிக்கையை தாக்கல் செய்து முதலமைச்சர் புரட்சித்தலைவர் பேசியதாவது:

சென்னை மருத்துவக் கல்லூரியை பட்டமேற்படிப்பு ஆராய்ச்சி நிலைய மாக மாற்றும் செயல் குறிப்பு அரசின் நாட்டத்தை சார்ந்துவந்திருக்கிறது. இதற்கு ரூ. 32 லட்சம் ஒதுக்கப் பட்டுள்ளது. ராயப்பேட்டை மருத்துவமனையில் புற்றுநோய் சிகிச்சைக்காக இரண்டு லட்சத்து 5 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

நடப்பாண்டில் கீழ்க்கண்ட திட்டங்கள் நிறைவேற்றப்படும்.

ஓட்டேரி, திருவட்டீசுவரர் காசநோய்மருத்துவமனை. ஊது உலை எண்ணெய் சேமிப்புத் தொட்டி கட்டுதல்.

ஓட்டேரி, திருவட்டீசுவரர் காசநோய் மருத்துவமனையில்குளிர்பதன கருவியுடன் கூடிய சவப் பரிசோதனை அறைகட்டுதல்:

சென்னை, அரசு கண் நோய் சிகிச்சை மருத்துவமனைக்காக கருவிகள் வாங்குதல்;

மதுரை எர்ஸ்கின் மருத்துவமனையில் கதிர்ப்பட்ட பல்நோய் சிகிச்சைப் பிரிவையும், முடநோய் சிகிச்சைப்பிரிவையும்கட்டுதல்:

மதுரை அரசினர் எர்ஸ்கின் மருத்துவமனையில் உள்ள சிறுநீரக நோய் சிகிச்சைப் பிரிவிற்காக கருவி வாங்குதல்;

தஞ்சாவூர் மருத்துவமனை கல்லூரியில் கால்நடைக் கொட்டகை கட்டுதல்.

பரவச் செய்வதற்கு மேற்கொள்ளப்பட வேண்டிய நடவடிக்கைகள் குறித்து அரசுக்குஆலோசனை நல்க கீழ்க்காணப்பெறும் நபர்கள் அடங்கிய ஆலோசனைக் குழு ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது:

கே. அருணாசலம் தலைவர் கணேசசர்மா உறுப்பினர் டாக்டர் இராஜலட்சுமி உறுப்பினர் — செயலாளர் ஆலோசனைக் குழுவின் பரிந்துரைகள் எதிர்பார்க்கப்படுகின்றன: இக்குழு பரிந்துரைகளைப் பெறுவதன் பேரில் இயற்கை முறை மருத்துவம் மக்களிடைய பரவச்செய்வதற்குத் தேவையான நடவடிக்கைகளை மீண்டும் மேற்கொள்ள வேண்டும்.

'யோகா' முறை மருத்

(2-ம் பக்கம் பார்க்க)

### கழக எம்.பி.க்கு புதிய பொறுப்பு

புதுடெல்லி, ஆக: 13 மத்திய தகவல் ஒலிபரப்பு ஆலோசனைக் குழு உறுப்பினராக கழக நாடாளுமன்ற உறுப்பினர் ஏ. முருகேசன் நியமிக்கப்பட்டுள்ளார்:

### அறுவை சிகிச்சை

தஞ்சாவூர், ராஜா மிராசுதாரர் அரசினர் மருத்துவமனையில் அறுவைச் சிகிச்சை கூடத் தொகுதி ஒன்றைக் கட்டுதல்:

கோயம்புத்தூர் மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் 28 படுக்கைகள் கொண்ட வார்டு கட்டுதல்.

கோயம்புத்தூர் மருத்துவக் கல்லூரிமருத்துவமனையில் ஆண், பெண் அறுவைச் சிகிச்சை வார்டுகளுக்கான சுழல் படிக்கட்டு கட்டுதல்.

கோயம்புத்தூர்மருத்துவக் கல்லூரிக்காக நுண்நோக்காடி ஒன்று வாங்குதல்.

தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டை. ராமநாதபுரம் மாவட்டம், அருப்புக்கோட்டை. திருநெல்வேலி மாவட்டம். கோவில்பட்டி ஆகிய இடங்களில் உள்ள அரசு மருத்துவமனைகளில்குருதி சேமிப்பு நிலையங்களை ஏற்படுத்தவும்—

தருமபுரி மாவட்டத் தலைமையிட மருத்துவமனையில் பால்வினை நோய் சிகிச்சை மருத்துவப்பிரிவு ஒன்றை ஏற்படுத்தவும்,

ஈரோடு மாவட்டத் தலைமையிட மருத்துவமனையில் முடநீக்கியல் பிரிவு ஒன்றையும், கண் நோய் சிகிச்சை பிரிவு ஒன்றையும் திருநெல்வேலி மாவட்டம், தூத்துக்குடி மாவட்டத் தலைமையிட மருத்துவமனையில் காது, மூக்கு, தொண்டை நோய் சிகிச்சை பிரிவு ஒன்றையும் ஏற்படுத்த கருதப்பட்டுள்ளது.

இயற்கை முறை மருத்துவம் மக்களிடையே

### எங்கும் எதிலும் தமிழ்: கழக அரசு கொள்கை பற்றி புரட்சித்தலைவர்

சென்னை, ஆக. 13— முந்திய அரசு கடைபிடித்து வந்ததும், அண்ணாவின் கொள்கையுமான எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்ற கொள்கையையே கழக அரசு பின்பற்றும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் இன்று சட்ட சபையில் அறிவித்தார்.

ஏழை எளியவர்களுக்கு இலவசசட்டஉதவிவழங்க மாவட்ட வாரியாக வழக்கறிஞர்கள்குழு அமைக்கப் பட்டுள்ளது என்று சட்ட அமைச்சர்நாராயணசாமி முதலியார் இன்று சட்ட சபையில் அறிவித்தார்.

ஏழை எளியவர்களுக்கு இலவச சட்ட உதவி வழங்கும் செயற் குறிப்பு உள்ளதா என்று சட்டசபையில் என். கிட்டப்பா கேட்டகேள்விக்கு அமைச்சர் பதிலளித்தார்:

உறுப்பினர்கள் கேட்ட கேள்விகளுக்கு அவர் கூறியதாவது:

ஏழை எளியவர்களுக்கு இலவச சட்ட உதவி வழங்க மாவட்ட வாரியாக வழக்கறிஞர்கள்குழு அமைக்கப்பட்டுள்ளது.

இதுவரை நான்கு வழக்குகளுக்கு இலவச சட்ட உதவியும் வழங்கப்பட்டுள்ளது:

இந்த வழக்கறிஞர்கள் குழுவை பயன்படுத்துவது பற்றியும்; எப்படிப்பட்ட வழக்குகளில் ஆஜராவது என்பது பற்றியும் விதி முறைகள் வகுக்கப்படுகின்றன.

குறிப்பிட்ட ஒரு வழக்கிற்கு எந்தெந்த வக்கீலை நியமிப்பது என்பதுபற்றி நீதிபதி முடிவு செய்வார் இலவச சட்ட ஆலோசனைக்குழு தாலுகா மட்டத்தில் செயல்படும்:

இவ்வாறு சட்ட அமைச்சர் கூறினார்:

அமைச்சர் நாராயணசாமிமுதலியார் ஆங்கிலத்தில் பதில் அளித்தார்:

### ஆங்கிலத்தில் பதிலா?

அமைச்சருக்கு தமிழ் எழுதபடிக்கத் தெரியும். அப்படியிருக்க அவர் ஆங்கிலத்திலேயே பதில் சொல்லலமா? என்று உறுப்பினர்கள் கேட்டனர்:

முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:

இந்த அரசைப் பொறுத்த வரை முன்பிருந்த தி. மு. க. அரசு பின்பற்றி வந்த எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்ற அண்ணாவின் கொள்கையையே கழக அரசும் பின் பற்றும் என்று கூறினார்.

### சிறைக்கு செல்வது யார்?: சட்டசபையில் சுவையான விவாதம்

**சென்னை, ஆக. 13- இந்த அரசைப் பொறுந்த வரையில் காரணமின்றி யாரும் சிறைக்குப் போவதை விரும்பவில்லை என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்**

சென்னை சிறையில் நீதிபதி இஸ்மாயில் கமிஷனிடம் சாட்சி சொன்னதை ஒட்டி 29 கைதிகள் உண்ணாவிரதம் இருப்பது குறித்து சாதிக்பாட்சா, சுப்பு, அம்பிகாபதி ஆகியோர் ஒரு ஒத்திவைப்புத் தீர்மானத்தை சட்டசபையில் கொண்டு வந்தனர்:

இதற்கு சட்ட அமைச்சர் நாராயணசாமிமுதலியார் பதிலளித்தார்.

அவர் கூறியதாவது:

3-8-77-ல் நீதிபதி இஸ்மாயில் சென்னை சிறைக்கு விஜயம் செய்தார். 8-ந்தேதி வரை சுமுக சூழ்நிலை இருந்தது.

8-ந்தேதி அன்று காலை கைதிகளுக்குள் சாப்பாட்டுத் தகராறு ஏற்பட்டது. இதற்கும் நீதிபதி இஸ்மாயில் சென்றதற்கும் எந்த வித சம்பந்தமுமில்லை. எந்தக் கைதியும் துன்புறுத்தப் படவில்லை.

கோதண்டராமன் என்பவரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டுவிட்டனர்.

இவ்வாறு நாராயணசாமி முதலியார் கூறினார்.

கருணாநிதி: சிறை அதிகாரிகள் தந்த அறிக்கையை அமைச்சர் படித்திருக்கிறார். யாராவது ஒரு அமைச்சரை சிறைக்கு அனுப்பி (அவையில் சிரிப்பு எழுந்தது) சிறைக்கு அனுப்பி என்று நான்சொன்னது பார்வையாளராக அனுப்பி இதுபற்றி விசாரிக்கவேண்டும்.

நாஞ்சிலார்:— இதற்கு எதிர்க் கட்சித் தலைவரை சிறைக்கு அனுப்ப தயாராக இருக்கிறோம்:

கருணாநிதி:— முன்னவரைவிட அதிகமாக நான் சென்றதால் நான் இதை ஏற்றுக் கொள்கிறேன்.

ஒரு அமைச்சர், அல்லது ஒரு பெரிய அதிகாரியை அனுப்பி இதுபற்றி விசாரிக்க வேண்டும்.

புரட்சித்தலைவர்: இந்த அரசைப் பொறுத்தவரை காரணமின்றி யாரும் சிறைக்குப் போவதை விரும்பவில்லை. அதற்கு குறுக்கே இருந்து தடையாகக்கூட இருக்கும்

எதிர்க்கட்சித்தலைவர் விரும்பியதைப்போல தக்க விவரம் தெரிந்த ஓய்வு பெற்ற நீதிபதியை அனுப்ப முயற்சி மேற்கொள்ளப்படும்.

இதன் பிறகு இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்திற்கு அனுமதி மறுக்கப்பட்டது.

### விவசாயிகள் போராட்டம் குறித்து சட்டசபையில்

## ஒத்திவைப்பு தீர்மானம்: நாஞ்சிலார் பதில்

**சென்னை, ஆக. 13— விவசாயிகள் போராட்டம் குறித்து இன்று சடடசபையில் கந்தசாமி, அம்பிகாபதி, அழகர்சாமி, லத்தீப் ஆகியோர் ஒரு ஒத்திவைப்பு தீர்மானத்தைக் கொண்டு வந்தனர்.**

இதற்கு பதில் அளித்து நிதி அமைச்சர் நாஞ்சிலார் கூறியதாவது:

சேலம், கோவை, திருச்சி, மதுரை, வடாற்காடு, தென் ஆற்காடு ஆகிய மாவட்டங்களில்சிலபகுதிகளில் லாரி, பஸ்களை நிறுத்தியும் சாலைகளில் மரங்களைப் போட்டு போக்கு வரத்துக்குஇடையூறுகள் பாறாங் கற்களை வைத்தும், லாரிகளின் சக்கரங்களில் உள்ள காற்றைப் பிடுங்கியும் இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபட்டனர்.

இதன் தொடர்பாக யாரும் கைது செய்யப்படவில்லை. சில இடங்களில் போராட்டம் நடந்தாலும் நிலைமை கட்டுக்கடங்கி இருக்கிறது.

பொதுச் சொத்துக்கு சேதம் ஏற்படாமல் நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. லாரிகளில் ஆட்களை ஏற்றி செல்வதால் அடிக்கடி விபத்து ஏற்படுகிறது. இதனால் உயிர்ச்சேதம் ஏற்படுகிறது. ஆகவே இதற்கு அரசு தடைவிதித்து பொதுவாக உத்தரவு பிறப்பித்துள்ளது:

ஏற்கனவேசிறுவிவசாயிகளுக்கு மின்சாரக் கட்டணம் 16 காசிலிருந்து 14 காசாகக் குறைக்கப் பட்டுள்ளது. விவசாயிகள் பிரச்சினையில் இந்த அரசு அதிக அக்கறை கொண்டிருக்கிறது

### பரிகாரம் என்ன

விவசாயிகளின் சங்கத் தலைவர் அவர்களுடைய கோரிக்கைகளைப் பற்றி முதல்வரைச் சந்தித்துப் பேசவோ அல்லது சர்வ கட்சித் தலைவர்களைக் கூட்டியோ பரிகாரம் காணுவதை விட்டு விட்டு லாரிகளில் ஆட்களை ஏற்றி வரக் கூடாது என்பதை ரத்து செய்ய வேண்டும் என்ற கோரிக்கையை முதல் பிரச்னையாக ஆக்கியிருக்கிறார்கள்:

லாரிகளில் ஆட்களை ஏற்றிவரக் கூடாது என்று உத்தரவிட்டிருப்பதற்குக் காரணம் "உளுந்தூர் பேட்டை நிகழ்ச்சி" என்பதை உறுப்பினர்கள் அறிவார்கள்.

இந்த விபத்தில்கிட்டத்தட்ட 10பேர் இறந்திருக்கிறார்கள்: இந்த விபத்தில் காயம் அடைந்த ஒருவரை முதலமைச்சர் நேற்று மருத்துவமனைக்கு சென்று பார்த்தார்.

26 வயதான அந்த இளைஞரின் இரு கால்களும் எடுக்கப் பட்டுள்ளன: அந்தக் குடும்பம் கண்ணீரும் கம்பலையுமாகதெருவில்நிற்கிறது: இப்படிப்பட்டசம்பவங்கள் நடக்காமல் இருக்கவே அரசு தடைவிதித்துள்ளது:

விவசாயிகள் சங்கம லாரிகளில் ஆட்களை ஏற்றி வந்து சென்னையில் மிகப் பெரிய ஊர்வலம் விட்டு அரசாங்கத்தை ஸ்தம்பிக்க வைக்கப் போகிறது என்ற காரணத்தால் இந்த நடவடிக்கை எடுக்கப்படவில்லை.

பல இடங்களில் போக்குவரத்துக்கு இடைஞ்சல் செய்தார்கள். யாருக்காக அவர்கள் போராடுகிறார்கள்? அவர்களுக்கு சிரமம் ஏற்படுவதை அந்தசங்கத்தலைவர்கள் கவனிக்க வேண்டும்.

இந்தப் பிரச்சினை நீடிக்க விடாமல் உடனடியாக பரிகாரம் காணும்வழிமுறைகளுக்கு சிந்தனையை செலவழிக்க வேண்டும். அவர்கள் பஸ்களில்வரலாம்; லாரிகளில் வரவேண்டும் என்பதற்கு ஒரு போராட்டம் தேவையா?

விவசாயிகள் விஷயத்தில் இந்த அரசு மிகுந்த அக்கறை கொண்டுள்ளது: அதற்காக எடுக்கும் நடவடிக்கைகள் எந்த அளவிற்கு நன்மையாக இருக்கும்என்பதைக் காலப்போக்கில் தெரிந்து கொள்வார்கள்: எந்தக் காரணம்கொண்டும் இந்த அரசைச் சந்தேகிக்க வேண்டாம்:

விவசாயிகள் இந்த நாட்டின் முதுகெலும்பு என்பதை உணர்ந்து செயல்பட்டு வருகிறோம்:

உறுப்பினர் அழகர்சாமி போன்றவர்கள் இந்தப் போராட்டத்தை அவர்கள் கைவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்ள வேண்டும்;

இவ்வாறு நாஞ்சிலார் கூறினார்.

நிதி அமைச்சர் விளக்கத்திற்குப் பிறகு இந்த தீர்மானத்திற்கு அனுமதி மறுக்கப்படுவதாக சபாநாயகர் முனு ஆதி தீர்ப்புக் கூறினார்:

கூட்டுறவுத் துறையில்

# ஊழல் பேர்வழிகள்மீது கிரிமினல் வழக்கு: எட்மண்ட் அறிவிப்பு

சென்னை, ஆக. 13— கூட்டுறவுத் துறையில் ஊழல் செய்தவர்கள் மீது பாரதி கமிஷனின் அறிக்கை அடிப்படையில் கட்டாயம் கிரிமினல் வழக்குகள் தொடரப்படும் என்று அமைச்சர் எட்மண்ட் சட்டசபையில் தெரிவித்தார்.

இத்தகைய நடவடிக்கைகள் எதிர் காலத்தில் தவறுகள் நடக்காமல் இருக்க முன்னெச்சரிக்கையாகவும், பாடமாகவும் அமையும் என்று அமைச்சர் எட்மண்ட் கூறினார்.

கூட்டுறவுத்துறை மானியக் கோரிக்கைகள் மீதான விவாதங்களுக்கு பதிலளிக்கையில், அமைச்சர் மேற்கண்ட அறிவிப்பை செய்தார்.

அறிக்கை சமீபத்தில் தான அரசுக்குக் கிடைத்தது. அதனை தான் பரிசீலித்துக் கொண்டிருப்பதாக அவர் சபையினருக்குத் தெரிவித்தார். அதனைப்படித்துப் பார்க்கையில் பெரும்பாலான புகார்கள் போன், கார் வசதிகளை துஷ்பிரயோகம் செய்தல், ஒரு குறிப்பிட்ட அரசியல் கட்சிக்கு விளம்பரங்கள் கொடுத்தல் போன்ற குற்றச்சாட்டுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன என்றும் 15 மத்திய கூட்டுறவு வங்கித் தலைவர்களைப் பற்றி அறிக்கை புகார்களைக்கூறியிருப்பதாகவும் அமைச்சர் தெரிவித்தார்.

பாரதி கமிஷன் அறிக்கையை மறைத்து வைத்துக் கொண்டு அமைச்சர் மாத்திரம் ரகசியமாக படித்துகொள்ளாமல் சபையில் வைக்கவேண்டும் என்று சுப்பு (தி.மு.க.) மற்றும் எதிர்க் கட்சித் தலைவர் கருணாநிதி, ப. உ. சண்முகம், சாதிக்பாட்சா ஆகியோர் வற்புறுத்தியதற்கு குற்றம் புரிந்தோர் என அறிக்கையில் கூறப்படுபவர்களிடமிருந்து சர்சார்ஜ் வசூலித்து விட ஏற்கனவே நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன என்றும் அப்புறம் இலாகா பூர்வமான நடவடிக்கைகளுக்குப் பிறகு அவர்கள் மீது கிரிமினல் வழக்குகள் போடப்படுமென்றும் அப்போது நடக்கக்கூடிய புலன் விசாரணைக்கு குந்தகம் ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான் பாரதி கமிஷன் அறிக்கையை இப்பொழுதே சபையில் வைக்கமுடியாமல் இருக்கிறதென்றும் புலன் விசாரணை யெல்லாம் முடிந்தபிறகு பாரதி கமிஷன் அறிக்கை சபையில் கட்டாயம் வைக்கப்படும் என்றும் அவர் உறுதி கூறினார்.

அரசியல் வஞ்சம் தீர்ப்பதற்காகவே, கவர்னர் ஆட்சியின் போது பாரதி கமிஷன் வைக்கப்பட்டதாக ப. உ. சண்முகம் மீண்டும் மீண்டும் வலியுறுத்தியதை அமைச்சர் எட்மண்ட் நிராகரித்தார். ஊழல்களை களைய வேண்டுமென்ற நல்ல நோக்குடனேயேதான் அது அமைக்கப்பட்டது என்றார். இக்கமிஷன் விசாரணையில் கூட்டுறவுத் துறை சீர் அடையும் விதத்தில் நன்மையே விளைந்திருக்கிறது என்றும் அவர் தெரிவித்தார்.

பாரதிகமிஷன் அறிக்கை அடிப்படையில் ஊழல் புகார்களில் சம்பந்தப்பட்டவர்கள் யார் யார் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் உள்ளார்கள் என்ற விவரம், கமிஷனின் அறிக்கையை சபையில் வைத்தால் தெரிந்து கொள்ளமுடியும் என்றும் அத்தகைய ஊழலில் சம்பந்தப்பட்டவர்களின் ஆதரவை சட்டசபைத் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் பெற்றுக் கொண்டது சரியா என்று எதிர்க்கட்சித் தலைவர் கருணாநிதி குறுக்கிட்டுக் கேட்டதற்கு முதலமைச்சர் புரட்சித்தலைவர் பதிலளித்தார். குற்றம் சாட்டப்பட்டவர்கள் என்பதாலேயே அவர்கள் குற்றவாளிகள் ஆகிவிடமாட்டார்கள் மேலும், தேர்தலில் உடன்பாடு என்பது வேறு. அது 'கொள்கை' உடன்பாடு அல்ல, அவரவர் 'தேவை'யின் அடிப்படையில் செய்து கொள்ளும் தேர்தல் உடன்பாடு அவ்வளவே என்றார். (கழக உறுப்பினர்கள் பலத்த கைதட்டல்)

## மக்கள் மத்தியில்...

குற்றப் புகார்கள் சொல்லப்பட்டு விட்டதாலேயே ஒருவர் குற்றவாளியாகிவிடமாட்டார் என்று கூறியதற்காக முதல்வருக்கு நன்றி செலுத்திக்கொள்வதாகக் கூறி. அந்தக்கைதட்டலில் கருணாநிதியும் சேர்ந்து கொண்டார்.

கோர்ட்டில் குற்றவாளி என்று தீர்ப்புக் கிடைக்கும் வரை அவரை குற்றவாளி என்றுகூறக்கூடாது. இதே போல்தான் மக்கள் மத்தியிலும் நாங்கள் கூறினோம். இன்னின்ன தவறு என்று கூறினோமே தவிர, தீர்ப்பு வழங்குவது நீதிமன்றம் தான் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

## யாராக இருந்தாலும்...

தொடர்ந்து கூட்டுறவ அமைச்சர், கருணாநிதிக்குப்பதிலளிக்கையில் தவறு செய்தவர்கள் தி. மு. கவா கழகமா காங்கிரசா ஜனதாவா என்ற கேள்விக்கே இங்கு இடமில்லை என்றும் தவறு செய்தவர்கள் யாராக இருந்தாலும், அவர் எந்தக் கட்சியாக இருந்தாலும், அவர்கள் மீது இந்த அரசு கட்டாயம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளும் என்று குற்றம் புரிந்தவர்கள் கட்டாயம் தண்டனை அனுபவித்தே ஆகவேண்டும் என்பதில் இந்த அரசு உறுதி பூண்டிருக்கிறது என்றும் கூறிய

போது சபையில் கழக உறுப்பினர்கள் மீண்டும் பலமாக மேஜையைத் தட்டி வரவேற்றார்கள்.

ஏழை எளிய மக்களின் நன்மைக்காக இந்தக் கூட்டுறவு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. அந்த நோக்கம் நிறைவேற்றப்பட கூட்டுறவுத் துறை பரிசுத்தப் படவேண்டும் என்பதில் இந்த அரசு மிகவும் அக்கறை கொண்டிருப்பதாக அமைச்சர் எட்மண்ட் வலியுறுத்தினார்.

இதற்கு முன்னால் ஆட்சி புரிந்த தி. மு. க. அரசு தனது கட்சிக்காரர்களாகப் பார்த்து இத்தகைய மத்திய வங்கிகளில் நியமனம் செய்ததே இத்தகைய முறைகேடுகள் நடப்பதற்கு காரணமாக அமைந்துவிட்டது என்று அமைச்சர் புகார் கூறினார்.

ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சேர்ந்த மலருக்கு கூட்டுறவுத்துறை விளம்பரங்கள் கொடுத்துவிட்டது என்ற ஒரு பிரச்னையே பெரியமுறைகேடுகள் ஆகிவிடமாட்டா என்று ப. உ. சண்முகம் எழுப்பிய வாதத்தை அமைச்சர் குறிப்பிட்டு "அத்தகைய விளம்பரங்களுக்கும் ஒரு அளவு—ஒரு வரைமுறை உண்டு தி. மு. க. ஆட்சியின்போது கட்சியின் மலருக்குக் கொடுக்கப்பட்ட விளம்பரங்கள் அத்தகைய அளவு-வரைமுறை-மனச்சாட்சி ஆகிய எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டதாக உள்ளது" என்று எட்மண்ட் கூறினார்.

எட்மண்ட் மேலும் பேசுகையில், கூட்டுறவு சங்கங்கள் விசேஷ அதிகாரியின் தலைமையில் தொடர்ந்துசெயல்பட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று அரசு நிச்சயம் விரும்பவில்லை என்றும் அவற்றிற்கெல்லாம்தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் வரவேண்டும் என்றுதான் விரும்புகிறது என்றும் ஆனால் கூட்டுறவுத் துறையில் தேர்தல்களை நடத்துவதற்கு அதன் சட்டத்தில் சில மாற்றங்களை எல்லாம் செய்ய வேண்டியுள்ளது என்றும் தி. மு. க. ஆட்சியில் செய்யப்பட்ட அதே தவறுகளை கழக அரசும் தொடர்ந்து செய்யவிரும்பவில்லை என்றும் கூறினார்.

உண்மையான, நலிந்து போன விவசாயிகளிடமிருந்து கூட்டுறவு கடன்களை வசூலிக்க ஜப்தி போன்ற கடுமையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படமாட்டாது என்று உறுதியளித்த அமைச்சர் அத்தகைய சம்பவங்கள் எங்கேனும் நடைபெற்றால் அரசு கவனத்திற்குக் கொண்டு வந்தால் தவறு செய்யும் அதிகாரிகள்மீது கட்டாயம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும் என்று சபையினருக்கு உத்திரவாதமளித்தார்.

இதையே காரணமாக வைத்துக் கொண்டு பணக்கார விவசாயிகளும் வாங்கிய கடன்களை திருப்பிச் செலுத்தாமல் இருப்பதை அனுமதிக்க முடியாது என்றும் அவர் கூறினார்.

## சட்டசபையில் கவனஈர்ப்பு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பொதுப்பணித் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:

தண்ணீர் இல்லாத இக்கட்டான நிலையில் முறை வைத்து தண்ணீர் கொடுப்பதை தவிர்க்க முடியாது. அதிகத் தண்ணீர் வருமவரை இந்தமுறை தொடர்ந்து இருக்கவேண்டிய நிலையில் உள்ளது.

மணிமுத்தாறு நீர்த்தேகத்திலிருந்து தாமிரபரணி பாசனத்திற்கு உபரித்தண்ணீர் விடப்படுகிறது. மணிமுத்தாறு நீர்த் தேக்கத்திலும் நீர் மட்டம் குறைந்திருப்பதால் உடனடியாக திறந்துவிட முடியாதநிலையில் உள்ளது.

மூன்று கால்வாய் பாசனத்தில் உள்ள பயிர்கள் இதுவரை வாடவில்லை.

இவ்வாறு பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF M/s THANGAMANI PUBLICATIONS FROM 156, LLOYDS ROAD, MADRAS-14 AND PRINTED BY K. THANGARAJAN AT NAV SAKTHI PRESS, 60, KUTCHERI ROAD MADRAS-4.
EDITOR: M. G. CHAKRAPANI

போராட்டத்தைகைவிடுக:

## குழந்தைவேலு கோரிக்கை

சென்னை, ஆக. 13— போராட்டத்தை கைவிடுமாறு விவசாய அமைச்சர் குழந்தைவேலு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

அவர் தமது வேண்டுகோளில் கூறியிருப்பதாவது:

புரட்சித் தலைவர் தலைமையில் அமைந்துள்ள இந்த அரசு எளிய விவசாயிகளின் குறைகளை தீர்க்க உங்களுடன் எப்போது வேண்டுமானாலும் கலந்து பேசி முடிவு எடுக்கிற ஆர்வத்துடன் இருக்கும் இந்த நல்லநேரத்தில் இது மாதிரியான போராட்டங்களை நாட்டின் நலனைக் கருத்தில்கொண்டு தவிர்க்குமாறும், விவசாயிகளின் பிரச்சினைகளை விரைவில் களைவதற்குத் தயாராக உள்ளதால் போராட்டத்தை கைவிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

'மீனவ நண்பன்' விழா:

## அமைச்சர்கள் பங்கேற்பு

சென்னை, ஆக. 13— சென்னை கமலா திரையரங்கில் நடைபெறும் 'மீனவ நண்பன்' படவெளியீட்டு விழாவில் அமைச்சர்கள் ராகவானந்தம், ராஜா முகமதுவுடன ஜேப்பியார், கே. கண்ணன் ஆகியோரும் பங்கேற்கின்றனர்.

# புரட்சித் தலைவர் அறிவிப்பு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தவம் நோய் சிகிச்சைக்கென ஏற்பளிக்கப்பட்டதொரு மருத்துவ முறையாகும். கீழே கொடுக்கப்பட்டுள்ள கருத்துக்களைக் குறித்து அரசுக்கு ஆலோசனை வழங்க யோகா தொடக்கக் குழு ஒன்றினை அரசு அமைத்துள்ளது.

1977-78 ஆம் ஆண்டில் 3,50,000 கருத்தடை அறுவைச்சிகிச்சைகள், 71,100 கருத்தடை வளையங்கள் பொருத்துதல், வழக்கமான கருத்தடைச் சாதனங்களைப் பயன படுத்துவபவர்கள் 2,21,800 பேர் என்ற இலக்கை இந்திய அரசு வரையறுத்துள்ளது.

சென்னை அரசு கண் நோய் மருத்துவமனையில் காளான் கிருமிகளால் ஏற்படும் நோயைக் கண்டு பிடிக்கும் நிலையம் ஒன்றை அமைக்க பெல்ஜியம் நிறுவனம் வழங்க முன்வந்துள்ள உதவியை அரசு ஏற்றுக் கொண்டுள்ளது. ரூபாய் 7 லட்சம் மதிப்பில் அறிவியல் கருவிகளையும் ஆண்டுதோறும் தொடரினச் செலவாக ரூபாய் 30 ஆயிரமும் பெல்ஜியம் நிறுவனம் வழங்கும்.

தண்டையார் பேட்டை தொற்றுநோய் சிகிச்சை மருத்துவமனையை சென்னை மாநகராட்சியிடமிருந்து எடுத்துக் கொண்டு மருத்துவக் கல்வி கற்பிக்கும் நிலையமாக மாற்றும் செயற்குறிப்பு பரிசீலிக்கப்பட்டு வருகிறது.

சென்னை மாநகரில் இப்போதிருக்கும் மருத்துவமனைகளில் ஏற்பட்டுள்ள நோயாளிகளின் நெருக்கடியை ஓரளவிற்குக் குறைக்கவும், மாநகரப் பகுதியில் மருத்துவ வசதிகளை ஏற்படுத்திக் கொடுக்கவும் வேண்டி, சென்னை மாநகரில் உள்ள மருத்துவக் கல்லூரிகளுடன் இணைந்திருக்கும் வகையில் 100 படுக்கைகள் கொண்ட மருத்துவமனைகள் ஐந்தினை புறநகர்ப் பகுதிகளில் அமைப்பதென்ற கொள்கை முடிவினை அரசு எடுத்துள்ளது.

அதன்படி, கலைஞர் கருணாநிதி நகரில் 100 படுக்கைகள் கொண்ட மருத்துவமனையை ரூ. 30 லட்சம் செலவிலும், தண்டையார்பேட்டை, அறிஞர் அண்ணா நகர் ஆகிய இடங்களில் முறையே ரூ. 32.32 லட்சம், ரூ. 28.02 லட்சம் செலவில் நூறு படுக்கைகள் கொண்ட மருத்துவமனைகளையும் கட்ட அரசு அனுமதி வழங்கியுள்ளது. தண்டையார்பேட்டை, பெரம்பூர் ஆகிய இடங்களில்கட்டப்படும் மருத்துவமனைகள் வட சென்னைப் பகுதியில் உள்ளவர்களுக்கு மருத்துவ வசதி அளிக்கும். தண்டையார் பேட்டை அறிஞர் அண்ணா நகர் ஆகிய இடங்களில் மருத்துவமனைகள் விரைந்து கட்டப்பட்டு வருகின்றன. இவை கூடிய சீக்கிரத்தில் கட்டி முடிக்கப்படுமென்று எதிர்பார்க்கப் படுகின்றன.

நடப்பாண்டில் 20 ஊராட்சி ஒன்றிய மருந்தகங்கள் ரூபாய் 7 லட்சத்து 21 ஆயிரம் மதிப்பில் அரசு மருந்தகங்களாக மாற்ற திட்டமிடப்பட்டுள்ளது.

குடிசை வாசிகளுக்கு அவர்களுக்கு வாசலிலேயே மருத்துவ வசதி செய்யும் திட்டத்தை அரசு வகுத்துள்ளது. இதன்கீழ் 102 மருத்துவப் பிரிவுகள் சென்னையில் அமைக்கப்பட்டுள்ளன.

புரையோடிய கண் அறுவை சிகிச்சை 25 ஆயிரம் பேருக்கு அளிக்க வேண்டும் என்ற திட்ட இலக்கை நிர்ணயித்து ரூபாய் 22 லட்சத்துக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

குழந்தைகளுக்கு தொழுநோய் கண்டிருப்பது அறியப்பட்டதால் ரூபாய் 28 ஆயிரத்து 800 மதிப்பீட்டு செலவில் 45 லட்சம் குழந்தைகளுக்கு சிகிச்சை அளிக்கப்படும்.

திண்டுக்கல்லில் ஓமியோபதி மருந்தகம் விரைவில் செயல்படத்தொடங்கும்.

பொதுவாக தமிழ்நாடு முழுவதிலும் காலரா நோய் குறைந்து வருகிறது. பிளேக் நோய் காணப்படவில்லை.

முன்னாள் அமைச்சர்

## ராமையா மரணம்: முதல்வர் அஞ்சலி

சென்னை, ஆக. 13— முன்னாள் தமிழக அமைச்சர் ராமையா சென்னை பொது மருத்துவமனையில் நேற்று பிற்பகல் காலமானார். தகவல் கிடைத்ததும் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரும், அமைச்சர் பொன்னையனும் விரைந்து சென்று மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனார், காங்கிரஸ் செயலாளர் ஏ. கே. சண்முகசுந்தரம், ப. சிதம்பரம், முன்னாள் அமைச்சர் பூவராகன், திண்டிவனம் ராமமூர்த்தி, மணிவர்மா கே. டி. கோசல்ராம் ஆகியோர் இறுதி அஞ்சலி செலுத்தினர்.

மாலை 6 மணிக்கு ராமையாவின் உடல் அவரது சொந்த ஊரான புதுக்கோட்டையை அடுத்த கார்ட்டுப்பட்டி கிராமத்திற்கு ஒரு வேனில் எடுத்துச்செல்லப்பட்டது.

ராமையாவிற்கு பொயநாயகி என்ற மனைவியும், அலமேலு, பொன்னம்மாள் என்ற இருமகள்களும், வெங்கடேசன் என்ற ஒரு மகனும் உள்ளனர்.

ராமையா மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து நிதியமைச்சர் நாஞ்சிலார் இரங்கல் செய்தி அனுப்பினார்.

அண்ணா, அலைஓசை

# பத்திரிகைகள் மீது உரிமைப்பிரச்சினை சபாநாயகர் தீர்ப்பு

சென்னை ஆக. 13— "அண்ணா" "அலைஓசை" ஆகிய நாளேடுகள் மீதுசட்ட மன்றத்தில் கொண்டுவரப்பட்ட உரிமை பிரச்சினைகள் மீது சபாநாயகர் முனு ஆதி தீர்ப்பளித்தார்.

"அண்ணா" பத்திரிகை மீது தி. மு. க. உறுப்பினர் சுப்பு கொண்டு வந்த உரிமைப் பிரச்சினை மீது சபாநாயகர் இன்று தீர்ப்பு அளித்தார்.

11-8-77ம் நாள் அண்ணா பத்திரிகையில் உமாநாத் படத்திற்கு பதிலாக சங்கரய்யா படம் அமைக்கப்பட்டது தொடர்பாக சுப்பு உரிமைப் பிரச்சினை கொண்டு வந்தார்.

அதன் மீது சபாநாயகர் முனு ஆதி தீர்ப்பு கூற முற்பட்டபோது சுப்பு எழுந்துதான் சிலகருத்துக்களை சொல்லவிரும்புவதாக சொன்னார்.

உடனே சபாநாயகர் அவரை உட்காரச்சொல்லி விட்டு நான் எல்லா விஷயத்தையும் இதிலேயே குறிப்பிட்டு சொல்லிவிடுகிறேன் என்றார்.

சுப்பு தொடர்ந்துதான் எதையோ சொல்ல எழுந்தார்.

சபாநாயகர் அவரை மீண்டும் உட்காரச் சொன்னார்.

அன்பழகன் குறுக்கிட்டு: உரிமைப் பிரச்சினை கொண்டுவந்தவர் அந்த பிரச்சினை சபையில் எடுத்துக்கொள்ளப்படும்போது ஓரிரு நிமிடம் பேச அனுமதிப்பது மரபு.

சபாநாயகர்: அவர் இரண்டு நிமிடத்தில் முடிக்க மாட்டார். (சபையில் பலத்த சிரிப்பு) சபையின் இதர நடவடிக்கைகளுக்கும் நேரம் ஒதுக்க வேண்டிய பொறுப்பு எனக்கு இருக்கிறது என்று கூறினார்.

முதல்வர் புரட்சித் தலைவர்: இந்த பிரச்சினையை உரிமைக் கமிட்டியின் ஆய்வுக்கு அனுப்ப நான் வேண்டுகிறேன். கமிட்டி இதுபற்றி முடிவு எடுத்துக் கொள்ளட்டும். இவ்வாறு முதல்வர் கூறியதும் எதிர்க் கட்சித்தலைவர்கள் வேண்டாம் வேண்டாம் என்று கூறினார்கள்.

சுப்பு: நான் உங்களுக்கு (சபாநாயகருக்கு) நன்றி தெரிவிப்பதற்காகத் தான் எழுந்தேன். நீங்கள் என்னை பேச அனுமதிக்க மறுக்கிறீர்கள்.

நான் விஷயத்தை சுருக்கமாகசொல்லி விடுகிறேன்.

அண்ணா காந்தி, ஆகியோர் அனைவருக்கும் பொதுவானவர்கள். காந்தி கள்ளுக் கடை என்று யாரும் வைக்க முடியாது. அதேபோல் அண்ணா பெயரையும் கட்சிக்கோ பத்திரிகைக்கோ வைக்கக் கூடாது.

(அப்போது சபாநாயகர் மணி அடித்து சுப்புவை உட்காரச் சொன்னார்)

முதல்வர் புரட்சித்தலைவர்: பிரச்சினை வேறு பக்கம் நோக்கி செல்கிறது. இதே போல் ஆளும் கட்சி உறுப்பினர்களும் பேச ஆரம்பித்தால் சபையில் வேறு அலுவல்கள் நடைபெறாது. இதை சபாநாயகர் கவனிக்க வேண்டும்.

பிறகு உரிமைப் பிரச்சினை மீது சபாநாயகர் தீர்ப்பு அளித்தார்.

அவர் கூறியதாவது:—

"அண்ணா" பத்திரிகை அந்த படத்தை மாற்றி போட்டதற்காக திருத்தம் வெளியிட்டுள்ளது. உள்ளூர் பத்திரிகைகளில் தவிர வெளியூர் பத்திரிகைகளில் அந்த தவறு திருத்தப்பட்டு விட்டது.

தவறுக்கு திருத்தமும் வெளியிட்டு, வருத்தமும் தெரிவித்து இருப்பதால் இந்த பிரச்சினையை இத்தோடு விட்டுவிடுகிறேன்.

மேலும் பத்திரிகைகள் சட்டசபை செய்திகளை மிகவும் கவனத்தோடு வெளியிடவேண்டும் என்று மீண்டும் கேட்டுக்கொள்ளுகிறேன். இவ்வாறு சபாநாயகர் கூறினார்.

அலைஓசை பத்திரிகை அமைச்சர் ராகவானந்தம் பேச்சை தவறாக வெளியிட்டதாக எஸ். ஆர். ராதா (கழகம்) சட்டசபையில் உரிமைப் பிரச்சினை கொண்டு வந்தார்.

திரு. வி. க. நகர் குடிசைமாற்று வாரிய கட்டிடங்களில் குடியிருப்பவர்கள் மீது வாடகை பாக்கிக்காக நடவடிக்கை எடுக்கப்படும் என்ற அடிப்படையில் அலைஓசை செய்தி வெளியிட்டதாக எஸ். ஆர். ராதா கூறினார்.

இந்த பத்திரிகை திட்டமிட்டே அமைச்சரவைக்கு அவப் பெயர் உண்டாக்கும் வகையில் செயல்படுவதாக அவர் கூறினார்.

சபாநாயகர் தமதுதீர்ப்பில் கூறியதாவது: தவறாக செய்தி வெளியிட்டதற்காக அலைஓசை ஆசிரியர் வருத்தம் தெரிவித்து கடிதம் எழுதியிருக்கிறார். திருத்தமும் வெளியிட்டிருக்கிறார்கள்.

சமீப காலமாக இது போன்ற தவறுகள் அடிக்கடி நடக்கின்றன. ஆகவே சட்டசபைச் செய்திகளை வெளியிடும் போது கவனத்துடன் இருக்குமாறு எச்சரிக்கிறேன், இவ்வாறு சபாநாயகர் கூறினார்.

அரிசன நல அமைச்சருக்கு

## கூடுதல் பொறுப்பு

சென்னை, ஆக. 13— கொத்தடிமை பற்றிய விவகாரங்களைக் கவனிக்கும் பொறுப்பு அரிசன நல அமைச்சர் சவுந்தரபாண்டியனிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இதற்கான உத்தரவை ஆளுநர் பிறப்பித்தார்.

# ராமையா மறைவுக்கு சட்ட மன்றத்தில அனுதாப தீர்மானம்

சென்னை, ஆக. 13— முன்னாள் அமைச்சர் ராமையா மறைவுக்கு சட்டசபையில் இன்று அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

ராமையா மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானத்தை அவை முன்னவர் நாஞ்சிலார் முன்மொழிந்தார். அப்பொழுது அவர் கூறியதாவது:

ராமையா அவர்கள் 1957 முதல்67வரை திருமயம் தொகுதிசட்டமன்ற உறுப்பினராகவும் அமைச்சராகவும் இருந்தார்.

57 முதல் 62 வரை மின்சாரத்துறை அமைச்சராகவும், 62 முதல் 67 வரை பொதுப்பணித்துறை அமைச்சராகவும், உணவு அமைச்சராகவும் பணியாற்றினார்.

கல்லூரி நாட்களில் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக வெளியேற்றப்பட்டார்.

பழகுவதற்கு இனிமையானவர். ராமையாவின் மறைவுக்கு சபை தனது இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

## மவுன அஞ்சலி

இவ்வாறு நாஞ்சிலார் பேசினார். எதிர்க்கட்சித் தலைவர்கருணாநிதி, ஏ. ஆர். மாரிமுத்து (காங்) ஜேம்ஸ் (ஜனதா) வி. கே. கோதண்டராமன் (மார்க்சிஸ்ட்) அழகிரிசாமி (கம்யூ) கந்தசாமி (இ. தே. பார்வர்டுபிளாக்) மார்க்கபந்து லத்தீப் ஆகியோர் பேசினர்கள். இரங்கல் தெரிவித்து சபாநாயகர் முனு ஆதியும் பேசினார்.

அஞ்சலி செலுத்தும் வகையில் உறுப்பினர்கள் அனைவரும் ஒரு நிமிடம் மவுனமாக நின்றனர்.

பின்னர் இரங்கல் தீர்மானம் நிறைவேறியது.

# விவசாயிகளின் போராட்டம் வாபஸ்

சென்னை, ஆக. 13— தமிழ்நாடு விவசாயிகள் சங்கம் தொடங்கிய போராட்டத்தை 12-ந் தேதி மாலையே வாபஸ் பெற்றுக் கொண்டனர்.

விவசாயிகளுக்கு பல்வேறு சலுகைகளை கழக அரசு அறிவித்துள்ளது. எனவே விவசாயிகளின் போராட்டத்தை கைவிட வேண்டும் என்று தமிழக அரசு வேண்டுகோள் விட்டிருந்தது.

தமிழ்நாடு விவசாயிகள் சங்கம் சார்பில் 11-ந் தேதி நள்ளிரவிலிருந்து கிளர்ச்சி நடத்தப் போவதாக அறிவித்திருந்தனர்.

இதை அடுத்து இம்மாதம் 11-ந்தேதி விவசாயிகள் சங்க போராட்டத்தைக் கைவிடக்கோரி சட்டசபையில் போக்குவரத்துத்துறை அமைச்சர் பொன்னையன் அறிக்கை மூலம் கேட்டுக் கொண்டார்.

விவசாயிகளுக்கு பல்வேறு சலுகைகளை கழக அரசு அறிவித்துள்ளது எனவே விவசாயிகள் போராட்டத்தை கைவிட வேண்டும் என்று அமைச்சர் கேட்டு கொண்டார்.

## போராட்டம் வாபஸ்

இம்மாதம் 11-ந் தேதி நள்ளிரவு தமிழ்நாட்டில் சில ஊர்களில் நடைபெற்ற போராட்டத்தை 12-ந் தேதி மாலையே வாபஸ் பெற்றுக் கொண்டதாக விவசாயிகள் சங்கம் அறிவித்துள்ளது.

# "மீனவநண்பன்" பட வெளியீட்டு விழா: கோலாகல ஏற்பாடு

சென்னை, ஆக. 13- புரட்சித்தலைவர் நடிக்கும் "மீனவ நண்பன்" திரைப்படம் இம்மாதம் 14ம் தேதி வெளியிடப்படுவதையொட்டி தமிழ் நாடு முழுவதும் பட வெளியீட்டு விழா கோலாகலமாக நடைபெறுகிறது.

'மீனவ நண்பன்' திரைப்படம் வெளியிடப்படும் நகரங்களில் எம். ஜி. ஆர். மன்றங்களின் ஊர்வலங்களும், திரையரங்குகளில் இனிப்பு வழங்குதலும், விழாக்களும் சிறப்பாக நடைபெற பிரும்மாண்டமான முறையில் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

பட வெளியீட்டு விழாக்களில் கழக சட்டமன்ற உறுப்பினர்களும் கழக முன்னணியினரும் பங்கேற்று பேசுகிறார்கள்.

புரட்சித்தலைவர் நடித்து வெளிவர இருக்கும் மீனவ நண்பன் திரைப்படம் சேலம் அம்சா தியேட்டரில் திரையிடப்பட உள்ளது. இதற்கான பட வெளியீட்டு விழா ஆகஸ்ட் 13-ந் தேதி மிகச்சிறப்பான முறையில் கொண்டாட நகர எம். ஜி. ஆர். மன்றமும், நகர கிளைக்கழகமும் ஏற்பாடுகள் செய்து வருகின்றன.

ஆகஸ்டு 13-ம் தேதி மாலை 3-30 மணி அளவில் சேலம் அம்மாப்பேட்டை காந்தி மைதானத்திலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்படுகிறது ஊர்வலத்துக்கு அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற பொதுச் செயலாளரும் கழக சட்டமன்ற உறுப்பினருமான திருச்சி சவுந்தரராசன் தலைமை யேற்று வருகிறார்.

## இன்னிசை

ஊர்வலத்தில் நவரசம் ஜி. கே. எஸ். கலைக் குழுவினரின் இன்னிசைக் கச்சேரி இடம் பெறுகிறது. புரட்சித்தலைவரின் திருஉருவப்படம் அலங்கரிக்கப்பட்ட ரதத்தைத் தொடர்ந்து கழகக் கொடிகளோடு சைக்கிள்கள், ரிக்ஷாக்கள் பங்குபெறுவதுடன் டிரக்லாரிகளிலும் குறவன் குறத்தி நடனம், நையாண்டி மேளம் ஆகியவை இடம் பெறுகின்றன.

சிலம்பாட்டம், கரக ஆட்டத்துடன் நடைபெறும் ஊர்வலத்தில் வழிநெடுக வாண வேடிக்கைகள் நடைபெற உள்ளன.

## பரிசுகள்

ஊர்வலத்தில் சிறப்பான முறையில் அலங்கார வண்டிகளோடு கலந்துகொள்ளும் வார்டு, பகுதிக் கழகங்கள் மன்றங்களுக்கு கேடயமும் பரிசுகளும் வழங்கப்பட உள்ளன.

கழகக் கொடியேந்தி பெருந்திரளாக ஊர்வலத்தில் கலந்துகொள்ள கழக மன்றத் தோழர்களை பட விழாக் குழுவினர் கேட்டுக் கொண்டுள்ளனர். ஆகஸ்ட் 14-ந் தேதி காலை 8 மணி காட்சிக்குரிய டிக்கெட்டுகளை எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் எஸ். பி. அங்கமுத்துவிடம் பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப் பட்டுள்ளது.

## திருச்சி

திருச்சி சிந்தாமணி அண்ணா சிலையிலிருந்து 14-ந்தேதி காலை 7 மணி அளவில் பட வெளியீட்டு விழா ஊர்வலம் தொகுதி எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் கரு. அன்புதாசன் தலைமையில் புறப்படுகிறது.

ஊர்வலத்தில் மாலை ஏந்திய யானை முன் செல்ல, வாணவேடிக்கை மேளதாள வாத்தியங்கள் இடம் பெறுகின்றன. ஜூபிடர் திரையரங்கை ஊர்வலம் அடைந்ததும், புரட்சித்தலைவரின் பிரும்மாண்டமான படத்திற்கு யானை மாலை அணிவிக்கிறது.

காலை 8 மணிக்கு பட விழா தொடங்கும். விழாவில் சட்டமன்ற உறுப்பினர் சி. மாணிக்கம் உட்பட கழக, மன்றப் பிரமுகர்கள் கலந்துகொண்டு பேசுகின்றனர்.

## கடலூர்

தென்னாற்காடு மாவட்டம் கடலூரில் மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் கே. ஜனார்த்தனம் தலைமையில் பட வெளியீட்டு விழா கோலாகலமாக நடைபெற உள்ளது.

விழாவில் சட்டமன்ற உறுப்பினர் அப்துல் லத்தீப், திரைப்பட வசனகர்த்தா ஆர். கே. சண்முகம் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பிக்கின்றனர்.

மக்கள் திலகம் எம். ஜி. ஆர். கலைக்குழு, குறையிலா-கலைந்லாளம்; ஜி. ஆர் மன்றம், எழில் வேந்தன் எம். ஜி. ஆர். மன்றம் ஆகியவை விழாவுக்கான ஏற்பாடுகளை செய்கிறது. அரசு கல்லூரி மாணவர்கள் துரை சிவாஜி தலைமையில் கலந்து கொள்கின்றனர்.

## மாயூரம்

மாயூரம் நகர உரிமைக் குரல் எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பாக பட வெளியீட்டு விழா மிகச் சிறப்பாக கொண்டாடப் படுகிறது.

"மீனவ நண்பன்" திரைப்படம் வெளியிடப்படும் கோமதி திரையரங்கில் கே. பாலகிருஷ்ணன் தலைமையில் விழா நடைபெறுகிறது. பட வெளியீடு காலதாமதத்தை முன்னிட்டு மாயூரம் ரயிலடியிலிருந்து சைக்கிள்களில் ஊர்வலமாகச் சென்று சிதம்பரம் லேனா திரையரங்கத்தில் "மீனவநண்பன்" திரைப்படத்தை ஊர்வலத்தினர் காண்பார்கள்.

## வேலூர்

வடாற்காடு, வேலூர் நகரில் படம் வெளியிடப்படும் ஸ்ரீகிருஷ்ணா திரையரங்கில் 14-ந் தேதிகாலை படத்துவக்க விழா சிறப்பாக நடைபெறுகிறது. மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் இரா. ச. மாறன் தலைமையில் கழகக் கொடிகள் வண்ண விளக்குகளால் திரையரங்கை அலங்காரம் செய்யும் பணியில் மன்றத் தோழர்கள் ஈடுபட்டுள்ளனர்.

திருவண்ணாமலை அன்பு திரையரங்கிலும், ஆம்பூர் ராமு திரையரங்கிலும் "மீனவ நண்பன்" பட வெளியீட்டுவிழா மிகச்சிறப்பாக நடைபெற ஆங்காங்குள்ள மன்றச்செயல் வீரர்கள் சிறப்பான முறையில் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

## தஞ்சை

தஞ்சை ராஜா திரையரங்கில் நடைபெறும் பட வெளியீட்டு விழாவில் திருவையாறு நகர உரிமைக்குரல் எம். ஜி. ஆர். மன்றத்தினர், மன்ற தலைவர் மூவர்-மகாலிங்கம் தலைமையில் ஊர்வலமாகச் சென்று கலந்து கொள்கின்றனர்.

ஊர்வலத்தில் திருவையாறு உரிமைக் குரல் எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் சந்திரசேகரன், பொருளாளர் பால. தியாகராசன், அவைத் தலைவர் நாராயணன், செயற்குழுத் தலைவர் இந்திரா செல்வம் உட்பட 25 பேர் கலந்து கொள்கின்றனர்.

## சென்னை

சென்னையில பட வெளியீட்டு விழாக்களில் கழக மாணவர்கள் பெரும் பங்கேற்கின்றனர்.

தேவிபாரடைசில் ந. யுவராஜ் தலைமையில், சட்டமன்ற உறுப்பினர் ஆர். வெள்ளைச்சாமியும், அகஸ்தியாவில் சு. மனோகரன் தலைமையில் கழக வழக்கறிஞர் பி. என். இராமச்சந்திரனும், கமலா திரையரங்கில் பொ. ஆறுமுகம் தலைமையில் மாவட்ட மாணவர் அமைப்பாளர் கே. எம். சுப்ரமணியமும், உமா திரையரங்கில் கல்யாணசுந்தரம் தலைமையில் பச்சையப்பன கல்லூரி மாணவர் விடுதி செயலாளர் கோ. நாராயணமூர்த்தியும் இனிப்பு வழங்குகின்றனர்.

கஜேந்திரபாபு, அன்பழகன் அமீர்பாஷா, கோபிநாத் ஆகியோர் விழாக்களில் பங்கேற்கிறார்கள்.

திரையரங்குகளில்புரட்சித்தலைவரின் புகழ் பரப்பும் பதாகைகள் அமைக்க ந. யுவராஜ், மனோகரன், ஆறுமுகம், அன்பழகன் ஆகியோர் அடங்கியமாணவர் குழு அமைக்கப்பட்டுள்ளது.

## குடந்தை

குடந்தை கற்பகம் திரையரங்கில் "மீனவ நண்பன்" பட வெளியீட்டுவிழா 14-ந்தேதி காலை 8 மணிக்கு சா. இளங்கோ தலைமையில் நடைபெறுகிறது.

அரங்க உரிமையாளருக்கு புலவர் புலமைப்பித்தன் பாராட்டு வாழ்த்திதழ் வழங்குகின்றார். சட்டமன்ற உறுப்பினர் குடந்தை எஸ். ஆர். ராதா உணவு வழங்குகிறார். கோவி. நாராயணசாமி இனிப்பு வழங்குகின்றார்.

## விழுப்புரம்

விழுப்புரம் சாந்தி தியேட்டரில் 14ம் தேதி காலை 8 மணிக்கு டி. சந்தானம் தலைமையில் எம். வேணுகோபால் கழகக் கொடியேற்ற கே. எஸ். அன்பழகன் இனிப்பு வழங்க பட வெளியீட்டு விழா சிறப்பாக நடைபெறுகிறது.

நாடாளுமன்ற உறுப்பினர் சி வேணுகோபால் சட்டமன்ற உறுப்பினர்கள் பி. கிருஷ்ணன், தங்கவேலு, கண்ணன், ரகோத்தமன், எல். ஆறுமுகம், வழக்கறிஞர் ராமகிருஷ்ணன் ஆகியோர் பங்கேற்கின்றனர்.

## கோவை

கோவை ராயல் திரையரங்கில் சட்டமன்ற கொறடா துரை கோவிந்தராசன தலைமையில் பட வெளியீட்டு விழா நடைபெறுகிறது. கே. ஆர். பி. மணிமொழியன், சட்டமன்ற உறுப்பினர்கள் க. மருதாசலம், திருப்பூர் மணிமாறன், ப. கோ. கிட்டு மற்றும் பரமசிவம் ஜார்ஜ் ஜக்கிரியா, க. சண்முகசுந்தரம் சுகுந்தன், பிரபாகரன், மலரவன், முத்து, அண்ணா நம்பி, இளைய நம்பி, கோவை தம்பி கருப்புசாமி காட்டூர் கிருஷ்ணசாமி ஆகியோர் கலந்து கொள்கின்றனர்.

## ஆத்தூர்

ஆத்தூர் கேசவன் தியேட்டரில் பி. கந்தசாமி தலைமையில் ஏ. ஆர். முருகேசன் கழகக் கொடியேற்ற பட வெளியீட்டு விழாவை சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

சேலம் மாவட்டத்தில்

# முசிறிப்புத்தன் எம்.எல்.ஏ நிகழ்ச்சிகள்

சேலம், ஆக. 13— சேலம் மாவட்டத்தில் நாளை (14-ம் தேதி அமைச்சர் குழந்தைவேலு பங்கேற்கும் நிகழ்ச்சிகளுடன், இளைஞர் அணி செயலாளர், அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற தலைவர் முசிறிப்புத்தன் கீழ்க்கண்ட நிகழ்ச்சிகளில் பங்கேற்கிறார்.

காலை 5-30 மணி சேலம் சந்திப்பு வரவேற்பு காலை 8-மணி மீனவ நண்பன் படவிழா காலை 9-மணி சேலம் கரூர் வைஸ்யா வங்கி ஆபீசர்ஸ் அசோசியேஷன் வரவேற்பு.

காலை 10 மணி அளவில் சிலநாயக்கம்பட்டி அரியானூர், வீரபாண்டி, பாலம்பட்டி, பிச்சம்பாளையம், பாப்பாரப்பட்டி, ஆட்டையாம்பட்டி ஆகிய ஊர்களில் கொடியேற்று விழாக்களில் கலந்துகொள்கிறார்.

வேம்படிதாளத்தில் உயர்நிலைப்பள்ளி ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சிகளிலும் கொடியேற்று விழா நிகழ்ச்சிகளிலும் பங்கேற்கிறார்.

இளம்பிள்ளையில், வேடுகாத்தாம்பட்டியில் பிற்பகல் முசிறி கொடியேற்றுகிறார்.

மாலை 3-15 மணி அளவில் சேலம் நகரில் நடைபெறும் கொடியேற்றுகிறார். விழாவில் முசிறிப்புத்தன் எம். எல். ஏ. கலந்துகொள்கிறார்.

இரவு 7 மணி அளவில் நன்றி அறிவிப்பு பொதுக் கூட்டத்தில் பங்கேற்றுப் பேசுகிறார். அனைத்து நிகழ்ச்சிகளிலும் மாவட்ட நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள் மாவட்ட தொகுதி நகர ஒன்றிய கழக அமைப்பாளர்களும் கிளைக்கழகத்தோழர்களும் கலந்துகொள்கிறார்கள்.

"அண்ணா மலர்"

# அதியமான் வேண்டுகோள்

பெங்களூர், ஆக. 13— அண்ணா பிறந்தநாளினையொட்டி ஆகஸ்ட் 15-ல் அண்ணா மலர் ஆங்கிலம் தமிழ்கன்னடத்தில் வெளியிடப்பட உள்ளது. மலரில் கருநாடக மாநில கழக சாதனைகளும், நிர்வாகிகள் முகவரிகளும் இடம் பெறுகின்றன.

மாநிலத்துக்கு உட்பட்ட கழக நிர்வாகிகள் செயலாளர்கள், தொகுதி வட்ட அமைப்பாளர்கள், எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்கள், பேச்சாளர்கள் தங்கள் முகவரியினை எழுதி மு. அதியமான் 7-173 பி. டபுள்யூ. டி. குவார்ட்டர்ஸ் வில்சன் கார்டன், பெங்களூர் 560027 என்ற முகவரிக்கு அனுப்பி வைக்குமாறு மு அதியமான் கேட்டுக் கொண்டுள்ளார்.

# ஆவடி டாங்கி தொழிற்சாலை தொழிலாளர் கூட்டம்

சென்னை, ஆக. 13— சென்னை ஆவடி டாங்கி தொழிற்சாலையான ஹெவி வெகிகிள்ஸ் பாக்டரியில் பணியாற்றும் அனைத்திந்திய அண்ணா தி. மு. க. தொழிலாளர்களின் பொது உறுப்பினர்கள் கூட்டம் ஆவடி மீனாட்சி திருமண மண்டபத்தில் ஆகஸ்டு 15-ம் தேதி காலை 10 மணிக்கு நடைபெறும் என்று ஆவடிநகரிய அமைப்பாளர் புலவர் சோமுசா தெரிவித்துள்ளார்.

அக்கூட்டத்தில் சென்னை மாநகர கழகப் பொறுப்பாளர்- பொதுச் செயலாளர் புரட்சித் தலைவரின் சிறப்புப் பிரதிநிதி ஜேப்பியார் தலைமையேற்று பேசுகிறார் என்றும் எச். வி. எப். கழக உறுப்பினர்கள் அனைவரும் தவறாமல் கலந்து கொள்ளுமாறும் புலவர் சோமுசா கேட்டுக் கொண்டுள்ளார்.

# இன்று (14-8-77) முதல்!

சென்னை
**தேவி பாரடைஸ்** 70mm A/C
**அகஸ்தியா** 70mm
**உமா**
**கமலா**
மற்றும்
தென்னாடெங்கும்

மக்கள் திலகம்
**எம்.ஜி.ஆர்**
வழங்கும்

முத்து
எண்டர்பிரைசஸ்

# மீனவ நண்பன்

(கலர் BY பிலிம் ஸெண்டர்)



கதை-வசனம்-டைரக்ஷன்
**ஸ்ரீதர்**

தயாரிப்பு
**Kr. சடையப்ப செட்டியார்**

இசை: எம்.எஸ்.விஸ்வநாதன்
ஒளிப்பதிவு: என்.பாலகிருஷ்ணன்
கலை: அங்கமுத்து
எடிட்டிங்: எம்.உமாநாத்
ஸ்டில்ஸ்: சாரதி
ஸ்டூடியோ: சத்யா ஸ்டூடியோஸ்(பி)லிட்., (LESSEES:WORKERS COMBINE)